11th August 1965]

## (2) ASSOCIATION OF FIVE MEMBERS WITH THE COMMITTEE ON ESTIMATES OF THE LEGISLATIVE ASSEMBLY.

THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Chairman, Sir, I move—

"That this House nominates the following five Members to associate with the Committee on Estimates of the Legislative Assembly for the year 1965–66 :—

1 Sri K. Anbazhagan.

2 Sri M. Subbiah Chettiar.

3 Sri K. K. Kothandaraman.

4 Sri N. R. Thiagarajan.

5. Srimathi S. Manjubashini."

MR. CHAIRMAN : The question is—

"That this House nominates the following five Members to associate with the Committee on Estimates of the Legislative Assembly for the year 1965–66 :—

1 Sri K. Anbazhagan.

2 Sri M. Subbiah Chettiar.

3 Sri K. K. Kothandaraman.

4 Sri N. R. Thiagarajan.

5 Srimathi S. Manjubashini ".

The motion was put and carried.

## V—GOVERNMENT BILLS.

### (1) THE MADRAS CITY MUNICIPAL CORPORATION (AMENDMENT) BILL, 1965 (L.A. BILL NO. 16 OF 1965)—*cont.*

MR. CHAIRMAN : We will now take up the clause-by-clause consideration of the Madras City Municipal Corporation (Amendment) Bill, 1965. There are no amendments to clauses 2 to 12. I will put the clauses together.

Clauses 2 to 12 were put and carried.

*Clause* 1.

MR. CHAIRMAN : The motion is—

'That clause 1 do stand part of the Bill'.

SRI S. K. SAMBANDHAN : Mr. Chairman, Sir I move—

"*For* sub-clause (2) of Clause 1, the following be *substituted* :—

'(2) Except section 5 which shall come into force after three years from the date of assent given by the Governor, all other sections shall come into force on such date as the State Government may, by notification, appoint'."

SRI G. KRISHNAMOORTHY : I second the amendment, Sir.

* SRI S. K. SAMBANDHAN : Mr. Chairman, Sir, the purpose of my amendment is that Clause 5 of the Bill should come into operation three years after the Bill has received the assent of the Governor.

Sir, the provisions of the Bill have already been discussed in great detail during the first reading stage of the Bill. I feel there is no necessity to bring in such a Bill with such a clause under the present circumstances with power to supersede the Corporation for abuse of power, neglect of duty, and so on and so forth. It has been pointed out very clearly that the powers now vested in the municipal authorities are not even sufficient. When that is the case, it is not fair on the part of the Government to take power for superseding the Corporation in case there is neglect of duty on their part. Even now the Government have sufficient powers and authority to call for explanations, call for records, and take action wherever and whenever necessary; whether it is the Corporation or any other local authority. While that is so, there is no need for this clause (clause 5) empowering the Government to supersede the Corporation under certain circumstances. As I pointed out in my speech during the first reading stage of the Bill, the Government themselves do not act diligently or reasonably. That is the main reason why I object to such a clause being put in the Bill. People like me will welcome the Government taking such a power in their hands, if they are acting reasonably. So far as I can understand, even in small things, the Government take a partial view, prejudiced view mainly basing their views on political motives. Therefore if such power is vested in the Government, it may lead to unwanted action on the part of the Government. So it would be better if the Government themselves do not take such powers. If they think it is absolutely necessary to take such powers into their hands, considering the present circumstances, I should say that it should be postponed for at least another three years till the next elections for the Corporation are over so that the people who are elected —it may be any party, the present ruling party or any other party—may apply their minds to it. And I am sure the people of the City will take care to elect the proper people, and the people so elected, will be more responsible. Thinking they have this power in their hands, the Government should not do anything which is against the interests of the people. So I would request the Government to agree to accept this amendment, so that this particular clause will come into force only after three years after the Bill receives the assent of the Governor.

* திரு. க. அன்பழகன் : மதிப்பிற்குரிய தலைவர் அவர்களே, முதலில் நான் தந்துள்ள திருத்தத்தை முன்மொழிகிறேன்.

3-30 p.m. "*For* sub-clause (2) of clause I, the following be *substituted* :—

'(2) Except section 5, which shall come into force after five years from the date of assent given by the Governor, all other sections shall come into force on such date as the State Government may, by notification, appoint'."

11th August 1965]

The amendment was duly seconded.

* **திரு. க. அன்பழகன் :** இந்தத் திருத்தத்தின் நோக்கம் இதைக் காண்கிறபோதே மதிப்பிற்குரிய அமைச்சர்களுக்குத் தெளிவாக விளங்கும் என்று நினைக்கிறேன். இந்த மசோதாவே நிறைவேற்றப் படக் கூடாது என்பது கூட இந்தத் திருத்தத்தின் நோக்கம் என்று சொல்லலாம். மாநகராட்சி மன்றத்தின் நிர்வாகத்தை ஒழுங்கு படுத்துவதற்கான வழிமுறைகளை அரசாங்கம், இந்த மசோதாவின் மூலம் வகுத்துக்கொள்வதை நான் எதிர்க்கவில்லை. திராவிட முன்னேற்றக் கழகம் அந்த வழிமுறைகளை எதிர்க்கவில்லை. 2-வது பிரிவிலிருந்து 12-வது பிரிவுவரையில் நாங்கள் திருத்தங்கள் தராத தற்கு முக்கியமான காரணம் அதுதான். மாநகராட்சி அதிகாரி களையும் மாநகராட்சி இலாகாத் தலைவர்களையும் அரசாங்கம் மாற்று வதையோ, அவர்களை அரசாங்கம் நியமிப்பதையோ, மாநகராட்சி நிர்வாகத்தில் குறைகள் ஏற்படுவதை அரசாங்கம் தவிர்ப்பதையோ நான் எதிர்க்கவில்லை; அதையெல்லாம் நான் வரவேற்கிறேன்; அந்த வகையில் கொண்டுவரப்படும் திருத்தங்களால் உண்மை யிலேயே மாநகராட்சி நிர்வாகம் மேலும் சிபடுத்தப்படும் என்றும் நான் எதிர்பார்க்கிறேன். ஐந்தாவது பிரிவு இன்னும் ஐந்தாண்டு காலம் வரையிலாவது அமலுக்குக் கொண்டுவரப்படக்கூடாது என்று நான் சொல்வதற்குக் காரணம், மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்ட அங்கத்தினர்களைக் கொண்ட சட்ட மன்றத்தைப் பெரிதும் மதிக்கும்போது, மக்களால் தேர்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக் கொண்ட இன்னொரு மன்றமாகிய மாநகராட்சி மன்றத்தை கேலிக் கூத்தாக ஆக்கக்கூடாது என்ற நோக்கம்தன். மாநகராட்சி மன்ற உறுப்பினர் ஒருவர் எத்தனை மக்களால் தேர்தெக்டுக்கப் படுகிறாரோ அதைவிட அதிகமான மக்களால் சட்ட மன்ற உறுப் பினர் ஒருவர் தேர்ந்தெடுக்கப்பட்டாலும், இரு மன்றங்களும் மக்க ளால் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக் கொண்டவைதான். மக்களால் தேர்தெடுக்கப்பட்டவர்களைக் கொண்ட மன்றங்களைக் கலைப்பது என்பது அவ்வளவு எளிதாக அரசாங்கம் மேற்கொள்ளத் தக்கது அல்ல. " அந்தச் செயலை மேற்கொள்ளத்தான் செய்வோம்" என்று ஆட்சியாளர்கள் கூறுவார்களானால், அதை நான் தடுக்க முடியாது. ஆனால், அந்தச் செயல் மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டவர்களைக் கொண்ட மன்றத்தைச் சிறுமைப்படுத்துவதாக ஆகும். மாநகராட்சி மன்றத்தின் நடவடிக்கைகள் உசிதமானவை யாகத் தோன்றுவிட்டால், அதற்குக் காரணம் கேட்டு, மன்றத் தினர் கொடுக்கும் விளக்கம் திருப்திகரமானதாக இல்லை என்று சொல்லி, மாநகராட்சி மன்றத்தைக் கலைக்கும் high handed action— -ஐ எடுக்க தான் தாம் விரும்பியபடி நடவடிக்கை எடுக்க 5-வது பிரிவில் கேட்கப்பட்டுள்ள புதிய அதிகாரங்கள் அரசாங் கத்திற்கு உரிமை அளிக்கின்றன. இந்த அதிகாரங்கள் அரசாங் கத்திற்கு ஒருநாளும் இருக்கக் கூடாது என்று கூறினால், மதிப்பிற் குரிய அமைச்சர்கள் அதை மறுப்பார்கள்; மாநகராட்சியில் மிகப் பெரிய குற்றங்கள் நடந்தால், இத்தகைய அதிகாரங்கள் இல்லாத அரசாங்கம் என்ன செய்வது என்று அவர்கள் கேட்பார்கள். இந்த அதிகாரங்களை அரசாங்கம் கோரும்போது, தேர்தல்

[திரு. க. அன்பழகன்] [11th August 1965

காலத்திலேயே, இந்த அதிகாரத்திற்கு உட்பட்டே அவர்கள் தேர்ந் தெடுக்கப்படுகிறுர்கள் என்பதை மாநகராட்சி உறுப்பினர்களாக வருகிறவர்கள் உணர்ந்து அங்குவரக்கூடிய வாய்ப்பு இருக்க வேண்டும்.

மாநகராட்சியினரால் கட்டப்பட்ட பல வீடுகளை ஒதுக்கும் விஷயத்தில் மாநகராட்சி மன்றத்தின் தீர்மானத்தைப்பற்றி மதிப் பிற்குரிய அமைச்சர் குறிப்பிட்டார். இதற்கு முன்பு மாநகராட்சி யால் வீடுகள் கட்டப்பட்டுப் பலருக்கு வழங்கப்பட்டிருக்கின்றன. அப்போதெல்லாம் கூட இன்னாருக்கெல்லாம் வழங்கப்படவில்லை என்ற குறை எழுந்தது. அதேபோன்ற குறைதான் இப்போதும் எழுந்திருக்கிறது. மாநகராட்சி மன்றம் தீர்மானித்தபடி வீடுகள் வழங்கப்பட்ட பிறகு அரசாங்கத்திற்கு அதுபற்றி மனு வந்திருக் கிறது. அதற்குப் பிறகுதான் சீட்டுப் போட்டு வீடுகளை வழங்க வேண்டும் என்று அரசாங்கம் சொல்லியிருக்கிறது. இன்ன முறை யில் அவைகள் வழங்கப்பட வேண்டும் என்று அரசாங்கம் ஏற்கெனவே தெரிவித்து அதற்குப் பிறகு மாநகராட்சி மன்றம் அவைகளை வேறு முறையில் வழங்கியிருந்தால், மதிப்பிற்குரிய அமைச்சரின் குற்றச்சாட்டு பொருத்தமானதாக இருக்கும். இதற்கு முன்பு வீடுகளை மாநகராட்சி எந்த முறையில் வழங்கி ஞலும் அதை அரசாங்கம் ஏற்றுக்கொண்டு வந்திருக்கிறது. ஆனல் வீடுகள் யாருக்குக் கொடுக்கப்பட்டன என்ற பிரச்னை எழுந்தது. அந்தப் பிரச்னை எப்போதும் எழுப்பப்பட முடியும். இந்த விஷயத்தில் மாநகராட்சி மன்றத்தின் தீர்மானமும் இதுவரை அரசாங்கத்தால் ரத்து செய்யப்படவில்லை. அது ரத்து செய்யப்படும் வரையில், வீடுகளை வழங்கும் விஷயத்தில் இன்னொரு முறையைக் கையாளவேண்டும் என்று அரசாங்கம் தெரிவித்தாலும் செயல்பட முடியாது. ஏற்கெனவே இருந்த முறைப்படித்தான் எல்லா வீடுகளும் வழங்கப்பட்டிருக்கின்றன. வேண்டுமானல் இந்த முறையை இனிமேல் மாற்றலாமேயொழிய, நட்பு முறை தங்களுக்குப் பிடிக்கவில்லை என்பதால் மாநகராட்சி மன்றத்தை கலைப்பதற்காக இப்படிப்பட்ட திருத்த மசோதாவைக் கொண்டுவருவது சரியல்ல. மாநகராட்சி மன்றம் கலைக்கப்படுவது பற்றி நான் உண்மையில் கவலைப்படவில்லை. மாநகராட்சியில் இருப்பதால்தான் அரசியல் நடத்த முடியும் என்று ஒரு அரசியல் கட்சி கருதுமானல், அதைவிட இழுக்கு அந்த அரசியல் கட்சிக்கு வேறெதுவும் இருக்க முடியாது என்று கூறுவேன். இருந்தாலும் இந்த ஜனநாயக நாட்டில் மாநகராட்சி மன்றத்தில் ஒரு கட்சி சில ஆண்டு காலமாக அதிகாரத்தில் இருக்கும்போது ஆளும் கட்சியினர் தங்களுக்குச் சட்டசபையில் உள்ள செல்வாக்கினல் இந்த மசோதாவை இங்கே சட்டமாக நிறைவேற்றி விட்டால், அதன் விளைவு பொதுமக்களுக்குத் திருப்தியளிப்பதாக இருக்காது என்பது குறித்து வருத்தப்படுகிறேன். எனவே அரசாங்கம் "ஸுபர்ஸீடிங் பவர்ஸ்"-ஐ எடுத்துக் கொள்வதற்கான பகுதியை ஐந்தாண்டு காலம் நிறுத்திவைக்க வேண்டும் என்று அரசாங்கத்தாரைக் கேட்டுக்கொள்கிறேன். அன்பழகன் சொல்லு வதை ஏற்றுக்கொள்ள விருப்பம் இல்லாவிட்டால் திரு. சம்பந்தன் தந்துள்ள திருத்தத்தின்படி மூன்றுண்டு காலமாவது இந்தப்

11th August 1965] *[திரு. க. அன்பழகன்]*

பிரிவை நிறுத்தி வைக்கும்படி அரசாங்கத்தாரைக் கேட்டுக் கொள்கிறேன். எதிர்க்கட்சியினர் சொல்வதை ஏற்றுக்கொள்ள ஆட்சியாளர்களுக்கு விருப்பம் இல்லையானால் "அடுத்த தேர்தல் வரையில் மாநகராட்சி மன்றத்தைக் கலைக்க மாட்டோம்" என்று அவர்கள் சொன்னால், நன்றாக இருக்கும். அப்படிச சொன்னால்தான் அது அவர்களுக்கு ஜனநாயகத்தில் உள்ள நம்பிக்கையைக் காட்டும் சிறந்த பண்புடைமை ஆகும்.

'யதேச்சாதிகார முறையில் ஆளும் காங்கிரஸ் கட்சியினர் எதிர்க்கட்சியினர் அதிகாரத்திலுள்ள மாநகராட்சி மன்றத்தைக் கலைத்து விட்டனர்' என்ற பழி இந்த ஆட்சியாளர்களுக்கு ஏற்படாமல் இருக்க வேண்டுமானால், இந்தப் பிரிவின் அமலை நிறுத்தி வைக்கவோ, இந்தப் பிரிவை மறுபரிசிலனை செய்யவோ இவர்கள் முன்வரவேண்டும் என்று சொல்லிக்கொள்கிறேன். இதை ஏற்றுக் கொள்வதோ, ஏற்றுக்கொள்ளாமல் இருப்பதோ, ஆளும் கட்சியின் நல்லெண்ணத்தைப் பொருத்தது. இதை ஆளும் கட்சியினர் ஏற்றுக் கொள்ளாவிட்டால் அவர்களுடைய நல்லெண்ணத்தைப் பற்றித்தான் சந்தேகப்படுவேனே தவிர, அரசாங்கத்தாருக்கு வரும் அதிகாரங்களைப்பற்றிக் கவலைப்பட மாட்டேன் என்று கூறி, என் திருத்தத்தை முன்மொழிகிறேன். 3-40 p.m.

* **திரு. சி. பி. சிற்றரசு :** மன்றத் தலைவர் அவர்களே, மாநகராட்சி மன்றத்தைக் கலைப்பதற்கான சட்டத்தைக் கொண்டு வந்து, 'மாநகராட்சி மன்றம் எதிர்க்கட்சிக்காரர்கள் கையிலே இருப்பதால் அதைக் கலைக்க ஆளுகின்ற சர்க்கார் முன்வந்தது' என்ற கெட்ட பெயருக்கு இந்த சர்க்கார் ஆளாகக்கூடாது என்று கருதுகிறேன். மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு அமைப்பைக் கலைப்பதற்கு, அதே மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட மற்றொரு அமைப்புக்கு சக்தி இருக்கிறது என்பதை நாங்கள் மறுக்கவில்லை. ஆனால் அதே நேரத்தில் ஒன்று சொல்லிக்கொள்ள விரும்புகின்றேன். நம்மைவிட பலவான அதிகாரத்தைப் பெற்றிருக்கின்ற மத்திய சர்க்கார், இந்த மாமன்றத்தைக் கலைப்பதற்கு முடிவு எடுக்குமானால், இந்த மாமன்றம் எவ்வளவு வேதனைப்படும் என்பதையும் தெரிவிக்க வேண்டியவர்களாக இருக்கிறோம். அதைப்பற்றி பேசுகிறபோது, நேற்று ஒரு உறுப்பினர் குறிப்பிட்டார் '5 கோடி ரூபாயை 3 பேர்கள் பங்கிட்டுக்கொள்கிறார்கள் என்று'. அதுவே இன்னொரு முறையிலே சொல்ல வேண்டுமானால் சொல்லலாம். ஆனால் அது அவ்வளவு நாகரிகமாக இருக்காது. '5 கோடி ரூபாயை 3 கோடி பேர்கள் பங்கிட்டுக்கொள்கிறார்கள். 160 கோடி ரூபாயை ஒரு 7, 8 மந்திரிகள் பங்கிட்டுக்கொள்கிறார்கள்' என்றும் சொல்ல முடியும். ஆனால் அது எவ்வளவு நாகரிகம் அல்ல. சரியும் அல்ல.

**மிஸ்டர் சேர்மென் :** சொல்லக்கூடாது என்று சொல்லியாகி விட்டது.

**திரு. சி. பி. சிற்றரசு :** சென்னை மாநகராட்சி மன்றம் 1959-ல் திராவிட முன்னேற்றக் கழகத்தின் கையிலே வந்தபோது 3½ கோடி ரூபாய்தான் வருமானம் வந்துகொண்டிருந்தது. இப்

[திரு. சி. பி. சிற்றரசு] [11th August 1965

பொழுது 6 கோடியே 25 லட்சம் வருமானம் பெறுகின்றது. ஆறு கோடியே 25 லட்சம் ரூபாய் வருமானம் பெறுகின்றது என்றால், யார், யார் வரி கொடுக்காமல் ஏமாற்றிக்கொண்டு வந்தார்களோ, யார், யார், பெரிய பெரிய கட்டிடங்களை வைத்துக் கொண்டு குறைவான வரிகளை செலுத்தினார்களோ, அதையெல்லாம் கண்டு பிடித்துத்தான் இந்த வருமானம் அதிகமாக்கப்பட்டிருக்கிறது.

அதே நேரத்தில் நம்முடைய மாகாணத்தில் மத்திய சர்க்காருக்கு சொந்தமாக இருந்த கட்டிடங்களுக்கு இது வரையிலும் வரி வாங்கப்படாமல் இருந்தது இப்பொழுதுதான் அந்தக் கட்டிடங்களுக்கு எல்லாம் வரி செலுத்தவேண்டும் என்று ஏறக்குறைய 20 லட்ச ரூபாய்க்கு மேல் மத்திய சர்க்காரிடமிருந்து பெறுவதற்கான ஏற்பாடுகள் நடைபெற்று, இரண்டு லட்ச ரூபாய்க்குச் செக் வந்துவிட்டது. ஆகையினாலே அதனுடைய வளர்ச்சியில், அதனுடைய திறமையிலே, பொது மக்கள் சந்தேகப்படவில்லை என்பதை நான் உறுதியாகக் கூறமுடியும், தவறு செய்கிறார்கள் என்றால் . . .

**மிஸ்டர் சேர்மன் :** இந்த ஷா வருவது 3 வருஷம் பொறுத்தா, 5 வருஷம் பொறுத்தா என்பதுதான் கேள்வி.

**திரு. சி. பி. சிற்றரசு :** குறைந்தது மூன்று ஆண்டுகளுக்காவது இதை ஒத்திவைக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். ஏனென்றால், முனிசிபல் சட்டத்தில் 40-வது பிரிவில் இருந்து 44 வரையிலும் சர்க்காருக்கு அதிகமான அதிகாரங்கள் வழங்கப்பட்டிருக்கின்றன. இந்த அதிகாரங்களைக் கொண்டே அங்கே ஏற்படுகிற தவறுகளை சீர்திருத்த வசதி இருக்கிறபோது, அதை திடீரென்று கலைப்பது, மறுபடியும் மக்களைப்போய் சந்திப்பதற்கு காலத்தை ஒத்திப்போடுவது, என்பதெல்லாம் ஒரு ஜனநாயகம் விரும்பி ஏற்றுக்கொள்ளாத முறை என்று கூறிக்கொண்டு, குறைந்தது மூன்று ஆண்டாகிலும் இதை ஒத்திவைக்க வேண்டுமென்று இந்த சர்க்காரை மெத்த பணிவன்போடு கேட்டுக் கொள்கிறேன்.

***கனம் திரு. எம். பக்தவத்சலம் :** கனம் தலைவர் அவர்களே, இந்த மசோதா முன்பு விவாதத்துக்கு வந்த போது இதன் பல பிரிவுகளைப்பற்றி அங்கத்தினர்கள் கருத்து தெரிவித்தார்கள். நானும் நிலைமையை விளக்கினேன். அதிலும் முக்கியமாக இந்த நகர மன்றத்தைக் கலைத்து விடலாம் என்று அரசாங்கத்துக்கு அதிகாரம் அளிக்கும் இந்தப் பிரிவைப் பற்றியும் விரிவாக விவாதிக்கப்பட்டது. நானும் அரசாங்கத்தின் நிலையை விரிவாக எடுத்துக் கூறினேன். எந்த சூழ்நிலையிலே எந்த நோக்கத்தோடு அரசாங்கத்துக்கு அதிகாரம் அளிக்கக்கூடிய இத்தகைய பிரிவு இதிலே சேர்க்கப்பட்டிருக்கிறது என்று நான் எடுத்துக் கூறினேன். சென்னை நகர மன்றத்தைப் பொருத்த மட்டிலும் 'இந்த அதிகாரம் இதுவரையிலே இல்லாத அதிகாரம், அரசாங்கத்துக்கு இந்த மசோதாவினால் அளிக்கப்படுகிறது' என்றால் இது ஒன்றும் புதிது அல்ல. மற்ற நகர மன்றங்களும் மக்களால் தேர்ந்தெடுக்கப்

11th August 1965] [திரு. எம். பக்தவத்சலம்]

படுகின்ற நகர மன்றங்கள் தான். தொன்று தொட்டு இந்த அதிகாரங்கள் இருந்து வருகின்றன. சிற்சில சமயங்களிலே இந்த அதிகாரம் பிரயோகிக்கப்பட்டும் வந்திருக்கின்றன. பஞ்சாயத்துக் களும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஸ்தாபனங்கள்தான். ஜன நாயக முறையிலே தேர்ந்தெடுக்கப்பட்ட ஸ்தாபனங்கள் தான். அதிலேயும் சமீபத்திலே இந்த மன்றத்திலே சட்டம் செய்திருக் கின்ரேும், பஞ்சாயத்து ஆட்சியைப்பற்றி அதிலேயும் இந்த மாதிரி அதிகாரம் அரசாங்கத்துக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. 'மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஸ்தாபனம் என்ன செய்தாலும் சரி, அரசாங் கத்துக்கு அதை கலைத்துவிடக் கூடிய அதிகாரம் கூடாது; அந்த அதிகாரமே வேண்டாம் என்று யாரும் சட்டத்தை செய்ய வில்லே. அதிகாரத்தை அரசாங்கத்துக்கு அளித்துதான், பஞ்சாயத்து பற்றிய சட்டம் செய்யப்பட்டிருக்கிறது.

நகர மன்ற சட்டம் பழமையாக இருக்கிறது. அது மாற்றப் படவில்லே. இன்று சென்னே நகரமன்ற சட்டத்திலே இது ஒரு குறைபாடாகக் கருதப்பட்டு அதை நீக்கும் வகையிலேதான் இந்தப் பிரிவு சேர்க்கப்படுகிறது. இந்த அதிகாரம் அரசாங்கத் துக்கு வேண்டியிருக்கிறது என்பதை உணர்ந்து இது சேர்க்கப் படுகிறது.

வீடு வினியோகிப்பை நான் அன்று ஒரு திருஷ்டாந்தத் துக்காகச் சொன்னேனே தவிர ஏதோ விட்டு விவகாரத்துக்கு மட்டும் இதை கலேத்துவிடலாம், என்ற வகையிலே கூறவில்லே. ஆனல் என்னுடைய எண்ணம் என்று குறிப்பிட்டார்கள் கனம் அங்கத்தினர் ஸ்ரீ அன்பழகன் அவர்கள் என்னுடைய எண்ணம் அவர்களுக்கு தெரியாது. தெரிந்து கொள்ளவும் முடியாது. நான் திருஷ்டாந்தத்துக்கு சொன்னேன். ஆனல், அது கூட கனம் அங்கத்தினர் அவர்கள் கூறியதில் இருந்து, 'இது முன்னமேயே நடந்து கொண்டு வந்த ஒரு முறை. அந்த முறைப்படி நகரமன்றம் யோகித்த முறையே தவறு என்று சொல்லக்கூடாது என்று சொல்வதே தவறு' என்று சொல்கிருர்கள். அதாவது கனம் அங்கத்தினர் அவர்கள் அந்த நகரமன்ற உறுப்பினர்களின் பிரதி நிதியாகக் கூறுகின்ருர்.

**திரு. க. அன்பழகன்:** தலேவர் அவர்களே, நான் அப்படி வினி யோகித்த முறையே தவறு என்று சொல்லக்கூடாது, என்று சொல்லவில்லே. அப்படி வினியோகிக்கும் முறையை இந்த மன்றத்தில் அனுமதித்து அவர்கள் ஏற்கனவே மாநகராட்சி மன்றத்தில் தீர்மானம் நிறைவேற்றிவிட்டார்கள். அதற்குப் பிறகு புதுமுறையிலே வினியோகிக்க வேண்டும் என்ற காரணத் தாலே இடர்ப்பாடு ஏற்படுகிறது. காலத்தவறு என்று சொன் னேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** அதோடு முன்பெல்லாம் நகாமன் றத்திலே இப்படி அனுமதித்து வந்தது என்று குறிப்பிட்டார்கள். ஆகவே 'நகரமன்றத்துக்கு உரிமை இருக்கிறது; அது செய்தது

சரி; அரசாங்கம் அதிலே தலையிடக்கூடாது' என்றுதான் அவர் கூறினர். அதுகூட சரியில்லை என்று கூறுவேன். எனக்குத் தெரிந்தவரையிலே முன்பெல்லாம் கமிஷனர் அலாட்மென்ட் செய்தார் இப்பொழுது நகரமன்றத்திலே உறுப்பினர்கள் பங்கு போட்டுக்கொள்ளக் கூடிய வகை இருக்கிறது. தவறுதலாக நான் சொல்லவில்லை. ஏனென்றால் உறுப்பினர்களே சொன்னார்கள். மேயர் அவர்களுடன் சேர்ந்து வந்த டெபுடேஷன், 'நாங்கள் இரண்டு மெம்பர்களுக்கு ஒரு வீடு வைத்துக்கொள்ளக்கூடாதா' என்று கேட்டனர்.

**திரு. க. அன்பழகன்:** தலைவர் அவர்களே, அமைச்சர் அவர்களிடத்திலே சொன்ன கருத்தை அதே சொற்களாலே சொல்லி விடுகிற காரணத்தாலே கருத்து மாறுகிறது. இரண்டு மெம்பர்கள் சேர்ந்து சிபாரிசு செய்தால், ஒரு வீடு என்பது, அங்கே இருக்கிற வீடுகள் எல்லாம் பல மெம்பர்கள் சேர்ந்து கொடுக்க வேண்டும் என்று எல்லோரும் சேர்ந்தால் கொடுக்க முடியாது. இரண்டு பேராவது சிபாரிசு செய்தால் பிரித்துக் கொடுக்க முடியும் என்பதிலேதான் பாகுபாடு. இரண்டு பேர் பிரித்துக் கொள்வதில்லை. சிபாரிசு முறை, ஜனநாயக முறை, நீண்ட நாளாக இருக்கிறது.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** எடுத்துக்கொள்வது அல்ல. இரண்டு மெம்பர் சேர்ந்து யாருக்கு கொடுக்கவேண்டும் என்றால் கொடுக்க வேண்டும். 'இது கூட இல்லையா; நகரமன்ற உறுப்பினர்களாக இருக்கிறபோது இதுகூட கூடாதா' என்றார்கள். அப்படி இல்லை. வீடு இல்லாதவர்கள் ஜாபிதாவை சீட்டுப்போட்டு கொடுப்பதுதான் நல்லது என்று அரசாங்கம் சொல்லிற்று. அது தப்பு, வீடு இல்லாதவர்களா, இருக்கிறவர்களா, என்று தெரியாது. முறைதவறு என்பது அவர்கள் கருத்து. இது ஒரு திருஷ்டாந்தத்துக்கு சொன்னேன். இதுகூட அரசாங்கம் கமிஷனருக்கு சொல்லியது. அவர் ஏற்றுக்கொள்ளவில்லை. நிலை என்ன? யார் ஏற்றுக்கொள்வது, யார் தப்பாகச் செய்கிறார்கள், என்பதுகூட அல்ல. 1½, 2 வருஷங்களாக 50 வீடுகள் கட்டப்பட்டும், பயன் இல்லாமல் இருக்கிறது. யாருக்கும் இல்லாமல், வீடுகள் இடிந்து விழக்கூடிய நிலையிலே இருக்கின்றன. அது தான் வரி கொடுப்போர் கவனிக்கவேண்டிய விஷயம். கவலைப்படவேண்டிய விஷயம். வரி கொடுப்போர் நலனையொட்டி அரசாங்கம் கவனிக்கவேண்டியதாக இருக்கிறது. இது ஒன்றுக்காகவே நடவடிக்கை எடுத்துக் கொள்ளப் போகின்றோம் என்றும் நான் சொல்லவில்லை. ஆனால் இப்பொழுது கனம் அங்கத்தினர் அவர்கள் தெரிவித்த அபிப்பிராயத்திலிருந்தே அரசாங்கம் சரி என்று நினைத்தால்கூட 'நாங்கள் இப்படித்தான் செய்வோம்' என்று இன்றைக்கு நடந்து கொண்டிருக்கிறது.'

**திரு. என். வி. நடராசன்:** தலைவர் அவர்களே, நமது முதலமைச்சர் அவர்கள் 'இப்பொழுதும் அப்படித்தான் நடந்து கொண்டிருக்கிறது; என்னை சந்தித்த பிறகு நான் சொன்னபடிகூட அவர்கள் செய்ய முனையவில்லை' என்று தெரிவித்தார்கள். ஆனால் ஏற்கனவே இருக்கும்படியான தீர்மானத்தை, நான் அறிந்த வரை

11th August 1965] [திரு. என். வி. நடராசன்]

யில், 347 விதிப்படி ரத்து செய்தால்தான், அவர்கள் சர்க்கார் சொல்லும்படியான அந்த முறையை மேற்கொள்ள முடியும் என்பதை அவர்களுக்கு நான் தெரிவிக்க விரும்புகிறேன். 3-50 p.m.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்** : நான் ஒன்றும் சொல்லவில்லை. மேயரும் உறுப்பினர்களும் வந்தபோது அவர்கள் சொன்னார்கள். அது சரியில்லை என்று சொன்னேன். 'இந்த அதிகாரம் கூட எங்களுக்கு இல்லையா' என்று கேட்டார்கள். நான் யோசித்துச் சொல்கிறேன் என்று சொன்னேன். பிறகு அரசாங்கத்திலிருந்து உத்தரவு கமிஷனருக்கு அனுப்பப்பட்டது. தீர்மானத்தை அரசாங்கம் ரத்து செய்துவிட்டால் என்ன? அரசாங்கம் இன்று உத்தரவு போட்டிருக்கிறது. முட்டுக்கட்டை போடவேண்டுமென்றால், 'தீர்மானம் இருக்கிறது' என்று இன்னும் பத்து நாட்கள் தள்ளலாம். இன்னும் பத்து நாட்கள் வீடுகள் வினியோகிக்கப்படாமல் இருக்கலாம். இதை ஒரு சாக்காக சொல்லலாமே தவிர, வாதமாக எடுத்துக் கொள்ளமுடியாது. அரசாங்கம் 'இந்த முறையில்தான் வீடு கொடுக்கவேண்டு' மென்று சொன்னார்கள். வகை எற்றுக் கொள்ளவில்லை. இது ஒரு திருஷ்டாந்தமாகத்தான் சொன்னேன். வீடு விஷயமாக பேச வந்தவர்களில், காங்கிரஸ் காரர்களும் இருந்தார்கள். எல்லோரும் ஏகோபித்த அபிப்பிராயம்தான் தெரிவித்தார்கள். அவர்களும் சேர்ந்துதான் இருக்கிறார்கள். இதில் அபிப்பிராயபேதமே அவர்களிடத்தில் இல்லை. எல்லோரும் 'நாங்கள் சொல்கிறபடி இரண்டுபேருக்கு ஒரு வீடாக கொடுக்கவேண்டு'மென்று சொன்னார்கள். இதில் கட்சி வகை ஒன்றுமில்லை. ஒருக்கால் இந்த நகரமன்றம் கலைக்கப்படுமானால் இன்றைக்கு மெஜாரிட்டியாக இருக்கிற தி. மு. க. உறுப்பினர்களோடு நாற்பது பேர் காங்கிரஸ் உறுப்பினர்களும் பாதிக்கத் தான் படுவார்கள். அதை அவர்கள் விரும்புகிறார்களா? ஒருக்காலும் விரும்பவில்லை. மைனாரிடியாக இருந்தாலும் அவர்களும் இருக்கத்தான் பிரியப்படுகிறார்கள். அவர்கள் கலைத்துவிடுங்கள் என்று சொல்கிறார்களா? இல்லை. இன்றைக்கு மெஜாரிட்டியாக இருக்கிற தி.மு.க. உறுப்பினர்கள் எவ்வாறு ஆட்சேபிக்கிறார்களோ அவ்வாறுதான் அவர்களும் ஆட்சேபிக்கிறார்கள். எனக்குத் தெரிந்த வரை சொல்வேன், காங்கிரஸ், தி.மு.க. என்ற பிரச்னை இதில் இல்லை; இன்றைக்கு நகர மன்றத்தில் பல காரியங்கள் செய்யப்படுகின்றன. மக்கள் இன்றைக்குப் பாதிக்கப்படுகிறார்கள் என்று நான் சொல்வதாகக் கொள்ள வேண்டாம். அப்படிப்பட்ட நிலை ஏற்பட்டால் அரசாங்கத்திற்கு பொறுப்பிருக்கிறது. அதை வகிக்க வேண்டியிருக்கிறது. அந்தப் பொறுப்பு உணர்ச்சியோடுதான் நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படுகிறது. அதனால்தான் இன்றைக்கு அந்த அதிகாரத்தை அரசாங்கம் கோருகிறது. மக்களுக்கு விமோசனம் வேண்டாமா? 'மற்றொரு தேர்தல் வரை பொறுத்துக் கொள்ளலாம்' என்று சொல்கிறார்கள். திருத்தம் அதுதான். திருத்தத்தில் மூன்று ஆண்டோ அல்லது ஐந்து ஆண்டோ என்று இருந்தாலும் அதன் உள் நோக்கம் வேறு. 'இந்த அரசாங்கம் அதைச் செய்யக்கூடாது, அடுத்து நாம் வருவோமோ என்னவோ, நகரமே

[திரு. எம். பக்தவத்சலம்] [11th August 1965

வந்து விடலாம் ; அப்போது இதை நாமே பாதுகாத்துக் கொள்ளலாம், இப்போது இருக்கிற நகரமன்றத்துக்கு பாதகம் வராமல் பார்த்துக் கொள்ளலாம், என்ற இந்த இரண்டு நோக்கமும் சேர்ந்ததுதான் இந்தத் திருத்தம். சட்டம் செய்வது என்றால் விளையாட்டுக்கு செய்வது அல்ல. மூன்று அல்லது ஐந்து ஆண்டுகளுக்குப் பிறகு வருவது என்பது அல்ல பிரச்னை. வேண்டாமென்றால் கூடாது என்று சொல்லவேண்டும். அதையும் சொன்னார்கள். அரசாங்கம் வேண்டாமென்று சொல்லவில்லை. திரு. அன்பழகன் அவர்கள் கூறுவதிலிருந்து மற்ற பகுதிகளையாவது அவர்கள் ஒப்புக்கொள்கிறார்கள் என்று கருதுகிறேன். இப்போது இன்றைக்கு சட்டம் செய்கிறோம் என்றால் நாளைக்கு என்ன செய்யப்போகிறோம் என்று சொல்லவில்லை. மறுபடியும் சொல்கிறேன். போதிய ஆதாரத்தோடுதான் எதையும் செய்வார்கள். அதனால் எடுத்துக்கொள்ளப் போகிறோம் என்று சொல்லவில்லை. மக்களுக்கு பாதுகாப்பு அளிப்பதற்காக இந்த அரசாங்கத்திற்கு இந்த அதிகாரம் இருக்கவேண்டும். சிலசமயம் தவறான காரியங்கள் நடைபெறுகின்றன. அதனால் மக்கள் பாதிக்கப்படுகிறார்கள். அதிலிருந்து மக்களைக் காப்பாற்ற வேண்டுமென்று இந்த அதிகாரத்தைக் கோருவதால் இதை மக்கள் பாராட்டுகிறார்கள். அதிகாரக் குறைவு இருக்கக் கூடாது என்றுதான் இந்த மசோதாவைக் கொண்டு வந்திருக்கிறோம், வேறு சில திருத்தங்களோடு மற்றொன்று கூறவிரும்புகிறேன். ஏதோ நாங்கள் கட்சி மனப்பான்மையோடு எதிர்க் கட்சிக்கு, தி.மு.க. விடம் எங்களுக்குள்ள விரோத மனப்பான்மையால், அவர்களுக்குப் பாதகமாக நியாயத்துக்கு விரோதமாக நாங்கள் செய்துகொண்டு போகிறோம் என்று எதிர்க் கட்சி உறுப்பினர்கள் நினைக்கிறார்கள். அப்படி அல்ல. ஒரு உதாரணத்தை சொல்ல விரும்புகிறேன். அப்படிப்பட்ட எண்ணம் இல்லை என்பதை மற்ற உறுப்பினர்கள் புரிந்துகொள்ள வேண்டுமென்பதற்காகத்தான் சொல்கிறேன். ஒரு நகாமன்றத்தின் தலைவர் தி.மு.க. வைச் சேர்ந்தவர். இந்த மன்றத்தில்கூட உறுப்பினர். சில தவறான காரியங்களை செய்ததாக அரசாங்கத்திற்குத் தெரிந்தது. செலவு செய்யப்பட்ட விவகாரம் அது. அந்த செலவு செய்து இருக்கக்கூடாது. அந்த செலவு நகர மக்களின் வரிப்பணத்திலிருந்து செய்யப்பட்டது. அது நகரமன்றத்தின் தலைவருடைய பொறுப்பில் நடைபெற்றதாக கருதியதால் அதற்காக அரசாங்கம் நோட்டீஸ் கொடுத்தது. ஜில்லா முனிசிபாலிடி சட்டத்தில் அதற்கு இடமிருக்கிறது. நகரமன்றம் அதைச் செய்யவில்லை. தலைவர் செய்தார். ஆகையால் நகரமன்றத் தலைவரை ஏன் நீக்கக்கூடாது என்றும் அதற்கு சமாதானம் கூறுங்கள் என்றும் இரண்டு மாதங்களுக்கு முன் நோட்டீஸ் கொடுக்கப்பட்டது. நகர மன்றத் தலைவர் என்ன காரணம் கூறுவார் ? அவர் செய்தது சரி என்று சொல்ல முடியாது. அந்த செலவு அதிகமோ, குறைவோ. அதிகமாகவும் இல்லை. இருந்தாலும் ஒரு பைசா அதிக செலவு செய்தாலும் தவறுதான். ஒழுங்கீனம் என்ற முறையில் நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டது. தலைவருடைய சமாதானம், 'இஞ்சினியர் சொல்லி அதைக்கட்டச் செய்தார்' என்பது. அரசாங்கம் என்ன முடிவு செய்தது ? 'ஏதோ செய்துவிட்டார்.

11th August 1965] [திரு. எம். பக்தவத்சலம்.]

அதோடு விட்டுவிடுவோம்' என்று விட்டுவிட்டது. இது இன்று பிற்பகல் எடுக்கப்பட்ட அரசாங்க முடிவு. 'பரவாயில்லை, இனிமேலாவது சரியாக நடக்கட்டும், விட்டுவிடலாம்' என்று முடிவு செய்திருக்கிறது. அவர் தி.மு.க. வைச் சேர்ந்தவர்தான்; தி.மு.க. என்றால் எப்போதும் விரோத மனப்பான்மையுடன் நடவடிக்கை எடுத்துக்கொள்ளும் அளவுக்கு நிதானம் தவறிப் போகவில்லை. கனம் தி.மு.க. தலைவர் மன்ற உறுப்பினர் ஸ்ரீ அன்பழகன் அவர்கள் சொன்னார், 'நகர மன்றத்தைப் பிடித்துக் கொண்டுதானா அரசியல் நடத்தவேண்டும்' என்று காங்கிரஸ் கட்சியைப் பொருத்தவரை, நகரமன்றம் தி.மு.க. விடம் இருப்பதால் கெட்டுப் போகவில்லை. சுதந்திரப் போராட்டம் நடந்தபோது எங்கெங்கு எதிர்ப்பு இருந்தது! சென்னை நகரமன்றம், ஜில்லா போர்டுகள் எல்லாம் எதிர்ப்பாகத்தான் இருந்தது. அப்போது காரியங்கள் நடக்கவில்லையா? சுதந்திரம் வாங்கவில்லையா? தேர்தலில் வெற்றி பெறவில்லையா? இதைப்பற்றிக் கவலைப்படவில்லை. எங்களுக்கு பொறுப்பு இருக்கிறது. நகரசபையில் தவறு நடந்தால், அப்போது அரசாங்கத்திற்கு போதிய அதிகாரம் இருந்தால், எடுத்துக் கொள்கிறோம். அந்த வகையில் இந்த மசோதா வந்திருக்கிறது. ஆகையால், இந்தத் திருத்தத்தை ஒப்புக் கொள்வதற்கில்லை, எதிர்க்கிறேன், என்று கூறி என்னுடைய வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

MR. CHAIRMAN : Is the hon. Member Sri K. Anbazhagan withdrawing his amendment?

திரு. க. அன்பழகன் : நான் எனது திருத்தத்தை வற்புறுத்தவில்லை.

The amendment was, by leave, withdrawn.

MR. CHAIRMAN : Is the hon. Member Sri S. K. Sambandhan pressing his amendment?

SRI S. K. SAMBANDHAN : I press my amendment, Sir.

MR. CHAIRMAN : The question is—

"*For* sub-clause (2) of clause 1, the following be *substituted* :—

'(2) Except section 5 which shall come into force after three years from the date of assent given by the Governor, all other sections shall come into force on such date as the State Government may, by notification, appoint.' ".

The amendment was put and declared lost.

Sri S. K. Sambandhan demanded a poll and the House divided thus :

*Ayes*

1. Sri K. Balasubramanya Iyer,
2. Sri K. Anbazhagan,
3. Sri G. Krishnamoorthi,

5. Sri N. Subbiah Chettiar.
6. Sri N. V. Natarajan,
7. Sri C. P. Chitrarasu,
8. Sri K. S. Abdul Wahab **and**
9. Dr. H. V. **Hande.**

*Noes.*

1. The Hon. Sri R. Venkataraman,
2. Sri K. Rajaram,
3. Sri V. K. Palaniswamy Gounder,
4. Srimathi S. Manjubashini,
5. Srimathi Saraswathi Pandurangam,
6. Srimathi T. L. Thirupurasundari,
7. Sri K. Ramadoss,
8. Dr. T. V Sivanandam,
9. Sri N. R. Thiagarajan,
10. Sri Mohanlal Mehta,
11. Sri K. Ramakrishna Achari,
12. Sri S. Jayarama Reddiar,
13. Sri K. V. Ramaswamy,
14. Sri S. D. Sundaram,
15. Sri A. Sambasiva Reddiar,
16. Sri R. Sivasankara Mehta,
17. Sri T. V. Devaraja Mudaliar,
18. Sri V. K. Ramaswamy Mudaliar,
19. Sri M. Rajah Iyer,
20. Sri E. Janakirama Mudaliar,
21. Sri V. Rengaswamy,
22. Sri M. Ethirajulu,
23. Sri K. Kamalakannan, and
24. Sri A. Chidambara Mudaliar.

Ayes—9; Noes—24; Neutral—Nil.

The amendment was lost.

Clause 1 was put and carried.

The long title and the Enacting Formula were put and carried.

4-00 p.m. THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move—

'That the Madras City Municipal Corporation (Amendment) Bill, 1965 (L.A. Bill No. 16 of 1965), as passed by the Assembly, be passed.'

11th August 1965]

MR. CHAIRMAN : Motion moved—

'That the Madras City Municipal Corporation (Amendment) Bill, 1965 (L.A. Bill No. 16 of 1965), as passed by the Assembly, be passed.'

* திரு. க. அன்பழகன் : தலைவர் அவர்களே, மாநகராட்சி மன்றத்தினுடைய அதிகார வரம்புகள் சென்னை மாநில அரசாங்கத்தினுடைய நிருவாகத்திற்கு முழுவதும், உட்பட்டதாக இல்லாத நிலைமையில், அதை முழுவதும் உட்படுத்த வேண்டுமென்ற வகையில், இப்போது அதைக் கலைப்பதற்கு அதிகாரம் பெற வேண்டுமென்றும், கொண்டு வரப்பட்ட திருத்த மசோதா நிறைவேற்றப் படுகிற கட்டத்தை அடைந்திருக்கிறது. அந்த சட்டசபையில் நிறைவேறியது இங்கும் நிறைவேறும் நிலைமையை அடைந்திருக்கிறது. இந்தச் சட்டம் பொதுமக்கள் பலருடைய சிந்தனையைக் கிளறுவதாக இருப்பதால், மன்றத்தினுடைய மற்ற பிரதிநிதிகள் சொல்லியது போலவும், இதன் அவசியத்தை ஆராய ஒரு பொறுக்குக் குழுவுக்கு இதை விடவேண்டுமென்று தி.மு.க. வினரும், எதிர்க்கட்சியைச் சேர்ந்த நண்பர்களும் கேட்டுக்கொண்டார்கள். என்றாலும், பொறுக்குக் குழுவுக்கு விட்டு மறுமுறையும் விவாதிக்க வாய்ப்பு அளிக்கப் படவில்லை. இந்தச் சட்டத்தில் கொடுமையான பகுதியாக இருப்பது கலைப்பதற்கு அதிகாரம் எடுத்துக்கொள்வதாகும். அதைச் சில ஆண்டுகள் ஒத்திவைக்க வேண்டுமென்றும், நடைமுறையில் உடனே கொண்டுவரக் கூடாது என்றும் கேட்டுக் கொள்ளப்பட்டது. அதையும் முதன் மந்திரி அவர்கள் ஏற்றுக் கொள்வதற்கில்லை என்று சொல்லிவிட்டார்கள். முதன் மந்திரி அவர்களைப் பொறுத்தவரையில் அவர்களை நான் நன்றாக அறிந்திருக்கிற வகையில், எப்போதும் எதையும் எதற்காகவும் விட்டுக் கொடுத்துப் பழகாதவர்கள் முதல் மந்திரி அவர்கள். ஆகையால் விட்டுக் கொடுப்பது என்ற வழியில் அவர்கள் மனம் மாறப்போவதில்லை. எதிர்க்கட்சிக்கு அவர் விட்டுக்கொடுப்பது என்ற கருத்துக்கே இடமில்லை. மாநிலத்தில் ஆளும் கட்சியாக காங்கிரஸ்காரர்களும் மாநகராட்சியில் தி.மு.க. வினரும் இருக்கிறார்கள்; ஒரு அமைப்புக்கு மற்றொரு அமைப்பு தருகிற முக்கியத்துவமும் மதிப்பும் தரப் பட்டிருக்கவேண்டும். இன்றைக்கு உள்ள மன நிலையில் இந்த சட்டத்தை இப்போது நிறைவேற்றிவிட்டால், நிச்சயமாக அச்சுறுத்தி கெடுபிடி செய்யலாம் என்ற காரணத்தால் எப்படியோ நிறைவேற்ற முன்வருகிறார்கள். உண்மையாகவே, ஜனநாயக முறையில், இந்த அதிகாரம் மக்களின் அரசாங்கத்திற்கு இருக்கிறது, ஆனால் ஜனநாயக மனப்பான்மையில் இந்த அதிகாரத்திற்கு இடம் இல்லை என்று கூற விரும்புகிறேன். மாநகராட்சி நிர்வாகத்தை சரிபடுத்துவதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்யலாம். ஆனால் அந்த நிர்வாகத்தை மாநில அரசாங்கமே ஏற்றுக்கொண்டு அதை அரசாங்க அதிகாரிகளைக் கொண்டே நடத்துமானால் அது பொது ஜன உரிமைக் கருத்துக்கு உகந்ததாக இருக்காது.

மாநகராட்சி மன்றம் கலைக்கப்படும் முறையே கூடாது என்று வலியுறுத்த விரும்புகிறேன். அது கலைக்கப்பட்டால், உடனே

தேர்தல் நடத்துவதற்கான முயற்சியையாவது அரசாங்கம் மேற்கொள்ள வேண்டும். இதற்கு வகை செய்யத்தக்க திருத்தம் எதுவும் நான் கொடுக்கவில்லை. மாநகராட்சி மன்றத்தைக் கலைப்பது என்பது ஜனநாயக அரசாங்கத்திற்கு இயல்பாக இருக்க வேண்டிய குணங்களுக்கு மாறானது, முறையற்றது.

இந்த மசோதாவின் கடுமையான நோக்கத்தைப் பார்க்கும் போது எனக்கும் என் கட்சியினருக்கும் ஏற்படும் வருத்தம் காரணமாக எங்கள் கண்டனத்தைக் காட்ட நாங்கள் வெளி நடப்புச் செய்ய வேண்டியது அவசியமாக இருந்தாலும், இம் மன்றத்தின் மாண்பையும் மரபையும் கருதி இந்த மன்றத்தில் முதன் முதலாக வெளிநடப்புச் செய்யும் முறையை நாங்கள் மேற் கொள்ள விரும்பவில்லை என்பதையும் சொல்லிக் கொண்டு எங்கள் கண்டனத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

*SRI V. K. RAMASWAMY MUDALIAR: Mr. Chairman, Sir, I am one of those who honestly feel that there should be a comprehensive Bill instead of a piecemeal legislation like this. Just before the dissolution of the Assembly, we had some amendments, and on that account, we formed the city council and area committees. That has created a lot of confusion. Further, the city is growing in importance. The population is now 20 lakhs. It is now an A class city, and people overnight want all amenities. We are expecting a lot of grants from the Central Government. The area of the city also has extended to a great extent. Times have changed considerably. This Act came into force in 1919, that is, about 46 years ago. Much water has flowed under the bridge since then. I would request the Hon. Minister in charge to bring forward a very comprehensive Bill, so that we can go into every clause and see what benefits can be derived by the public of Madras. That is all my submission, Sir.

4-10 p.m.

* திரு. எஸ். கே. சம்பந்தன்: கனம் தலைவர் அவர்களே, மாநக ராட்சியைக் கலைப்பது சம்பந்தமாக ஒரு சில உதாரணங்களை கனம் முதல் அமைச்சர் குறிப்பிட்டார். வீடுகள் கட்டி அவைகளை வினி யோகிப்பதில் மாநகராட்சி நடந்துகொண்ட விதத்தைப்பற்றி அவர் குறிப்பிட்டார். நம் நாட்டில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட வர்கள் நகராட்சியை நடத்தும்போது, ஏழைகளுக்கு வீடுகளைக் கொடுக்க வேண்டும் என்றோ, எந்த வருமானமும் இல்லாதவர் களுக்கு வீடுகளைக் கொடுக்க வேண்டும் என்றோ, ஒரு குறிப்பிட்ட ஜாதியினருக்கு வீடுகளைக் கொடுக்க வேண்டும் என்றோ, சொல்ல அரசாங்கத்திற்கு அதிகாரம் இருக்கலாம். ஆனால், அவைகளை இந்த முறையில் தான் கொடுக்க வேண்டும் என்று சொல்ல அரசாங் கத்திற்கு அதிகாரம் இருக்க வேண்டுமா, அந்த விஷயத்தில் தன் விருப்பம் போல் செயலாற்றக் கூடவா நகர சபைக்கு உரிமை இருக்கக்கூடாது, என்று கேட்க விரும்புகிறேன். நகராட்சி மன்றத்தினர் பொறுப்புள்ளவர்கள் இல்லையா? வீடுகளை இன்னா ருக்குக் கொடுக்க வேண்டும் என்று சர்க்கார் சொல்லியிருந்து, அதற்கு மேல் நகராட்சி மன்றத்தினர் வேறு விதமாக நடந்து

11th August 1965] [திரு. எஸ். கே. சம்பந்தன்]

கொண்டிருந்தால், அதைக் கண்டிக்க வேண்டுமே தவிர, வீடுகளை இந்த முறையில் தான் கொடுக்க வேண்டும் என்று அரசாங்கம் சொல்வது சரியாகாது. இந்த முறையில் தான் வீடுகளைக் கொடுக்க வேண்டும் என்று அரசாங்கம் வற்புறுத்துவதானால், நகராட்சி மன்ற விவகாரங்களில் அரசாங்கம் தலையிடுவதாக ஆகிறது, எந்த ஒரு காரியத்திலும் அரசாங்கம் தலையிடும் என்று ஆகிறது. நான் குறிப்பிட்ட இந்தக் காரணத்தாலாவது, இந்த திருத்த மசோதாவை, தற்போதைக்கு அரசாங்கம் கைவிட வேண்டும் என்று சொல்லிக்கொண்டு என் வார்த்தையை முடிக்கிறேன்.

SRI K. BALASUBRAMANYA IYER : Sir, I am not pleased with the whole thing. I feel that so far as the civic administration of our city is concerned, it should be entirely free from party considerations. Civic administration is a thing in which all of us are interested. There is no question of party so far as water-supply, sanitation, drainage, etc., are concerned. All parties want proper drainage and proper water-supply. And, therefore, there can be no question of parties here. As the Chief Minister very significantly remarked, they came to him in a deputation. Therefore on that particular matter, they seem to be united. Therefore there can be no question of parties so far as our Corporation is concerned. The Government should see that there are no party considerations in the administration of the Corporation. If there is any question of party consideration, the Government should take over the administration of the Corporation themselves.

* கனம் திரு. எம். பக்தவத்சலம் : கனம் தலைவர் அவர்களே, இந்த மன்றத்தின் கௌரவத்தை யொட்டி தாம் வெளிநடப்பு செய்யப் போவதில்லை என்று திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் ஸ்ரீ அன்பழகன் முடிவு செய்ததற்காக அவருக்கு என் பாராட்டுதலைத் தெரிவித்துக்கொள்கிறேன். தங்கள் உள்ளங்களில் வருத்தம் இருந்தாலும், வெளிநடப்புச் செய்ய திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர்கள் விரும்பவில்லை என்று அவர் பெருந்தன்மையாகச் சொன்னார். அந்த சந்தர்ப்பத்தில் இந்த மன்றத்தின் கௌரவத்தைப் பற்றி அவர் குறிப்பிட்டார். எங்கள் மன்றத்தில்—சட்ட சபையில்—நீண்ட காலம் அங்கத்தினராக இருந்த இவர் இந்த மன்றத்தின் மரியாதையைப் பற்றிக் குறிப்பிட்ட வார்த்தைகள் என் உள்ளத்தைத் தொட்டன. எனக்கு மிகுந்த மகிழ்ச்சி ஏற்பட்டது. கட்சிகளுக்கிடையே எத்தனையோ வித்தியாசங்கள் இருந்தாலும், வெளிநடப்பினால் மன்றத்தின் கௌரவம் பாதிக்கப்படும் என்ற காரணத்தால் அவர் வெளிநடப்புச் செய்யாமல் இருக்க முடிவுசெய்தது குறித்து நான் மகிழ்ச்சியடைகிறேன்.

நாம் 'ட்ரெடிஷன்ஸ்'-ஐ அமைக்கிறோம். நான் இதை தற்புகழ்ச்சிக்காகச் சொல்லவில்லை. மற்ற மாநிலங்களைப்பற்றிக் குறைவாகப் பேச நான் விரும்பவில்லை. மற்ற மாநிலங்களைப் பற்றியோ மற்ற நாடுகளைப் பற்றியோ குறைவாகப் பேசுவது தவறு என்று நான் உணர்கிறேன். இருந்தாலும் தமிழ்நாட்டைப் பொருத்தவரையில்,

மற்ற மாநிலங்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, நம்மிடம் இருக்கும் உயர்ந்த பண்பும் பெருந்தன்மையும் மற்ற ராஜ்யங்களில் உள்ளவர்களுக்கு அவ்வளவு சுலபமாக வருவதில்லை. மற்ற ராஜ்யத்தவர்கள் நம்மை இதற்காகப் பாராட்டுகிறார்கள். வெளிநாடுகளில் உள்ளவர்கள் கூட இதற்காக நம்மைப் பாராட்டுகிறார்கள்.

இந்த மன்றத்தின் கௌரவத்தை மதித்ததற்காக ஸ்ரீ அன்பழகன் அவர்களைப் பாராட்டுகிறேன். அவர் கூறியதுபற்றி மற்றவர்களும் சிந்தித்திருப்பார்கள் என்று நினைக்கிறேன்.

**திரு. க. அன்பழகன்:** எங்கள் வருத்தத்தை கவனிக்க வேண்டும்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** அவர்களுக்கு வருத்தம் ஏற்பட்டால், நான் என்ன செய்ய முடியும்? இந்த விஷயத்தில் தாட்சண்யம் பார்ப்பதற்கில்லை. பொதுநலத்திற்காகச் செயலாற்றும் போது தாட்சண்யம் பார்ப்பதற்கில்லை. விட்டுக்கொடுக்கும் தன்மை எனக்கு இல்லை என்று ஸ்ரீ அன்பழகன் கூறினார். ஒரு தவறு நிகழ்ந்ததற்காக ஒரு மன்றத்தின் தலைவரின் மீது 'ஏன் நடவடிக்கை எடுக்கக் கூடாது' என்று காரணம் கேட்டதற்கு தான் எஞ்ஜினியர் கூறிய யோசனையின்படிச் செயலாற்றியதாக அம்மன்றத்தின் தலைவர் கூறிய விளக்கத்தை சமீபத்தில் தான் நான் ஏற்றுக்கொண்டேன் என்பதை இந்த சந்தர்ப்பத்தில் தெரிவிக்க விரும்புகிறேன். எனவே, எனக்கு விட்டுக்கொடுக்கும் தன்மை உண்டு. விட்டுக்கொடுக்கும் தன்மை எனக்கு ரொம்ப இருப்பதால் நான் கோழை என்று கூடச் சிலர் சொல்கிறார்கள். எனக்கு உறுதியான போக்கு உண்டு. பொதுவாழ்க்கையில் இருப்பவர்களுக்கு உறுதியான போக்கு தேவை. அது எனக்கு இருப்பதாகவே நினைக்கிறேன். அது எனக்கு இருப்பதாக கனம் அங்கத்தினர்கள் ஒத்துக்கொள்வார்கள் என்று நினைக்கிறேன்.

'வீடுகள் விஷயத்தில் கூட நகராட்சி மன்றத்திற்கு அதிகாரம் கிடையாதா, இந்த விஷயத்தில் கூட அரசாங்கம் தலையிட வேண்டுமா' என்று ஸ்ரீ அன்பழகன் கேட்டார். நகராட்சி மன்றத்திற்கு 'ஆடானமி' இருக்கிறது. ஆனால், 'ஆடானமி'-க்கு ஒரு வரம்பு இருக்கிறது. இந்த விஷயத்தில் இப்போது நான் விவரங்களில் இறங்க விரும்பவில்லை. இப்போது அரசாங்கத்திற்கும் நகராட்சி மன்றத்திற்கும் அதிகாரப் போராட்டம் நடத்தவில்லை. நகராட்சி மக்கள் பாதிக்கப்படக்கூடாது. 'எங்களுக்கு கெட்ட பெயரை சம்பாதித்துக்கொள்ளும் விதத்தில் ஒரு காரியத்தை நாங்கள் ஏன் செய்ய வேண்டும்?' என்று ஸ்ரீ ஹாண்டே கேட்டார். இதையெல்லாம் நான் சிந்தித்துப் பார்த்ததுண்டு. மக்கள் நலத்திற்காக நாங்கள் சில கடமைகளைச் செய்ய வேண்டியிருக்கிறது. இன்று நடக்கக்கூடிய தவறுகளைத் தவிர்த்து மக்களுடைய கஷ்டங்களுக்குப் பரிகாரம் காண வேண்டியது அரசாங்கத்தின் பொறுப்பு என்பதை உணர்ந்து தான் அரசாங்கம் இந்த மசோதாவைக் கொண்டுவந்திருக்கிறது; இந்த மசோதாவை அரசாங்கம் பொறுப்புணர்ச்சி காரணமாகக் கொண்டுவந்திருக்கிறது.

11th August 1965] *[திரு. எம். பக்தவத்சலம்.]*

கனம் அங்கத்தினர் ஸ்ரீ ராமசாமி முதலியார் ' Comprehensive Bill ' கொண்டுவரப்பட வேண்டும் என்று சொன்னார். விரிவான மசோதா கொண்டுவருவது அரசாங்கத்தின் யோசனையில் இருக்கிறது. நகராட்சி மன்றச் சட்டத்தை சில ஆண்டுகளுக்கு முன்பு திருத்தியமைத்தோம். மிகப் பழமையான '' District Municipalities Act '' ஐத் திருத்தியமைக்க விரிவான மசோதா தயாரிப்பதற்கே அவகாசம் இல்லை. முதலில் அந்த விரிவான மசோதா தயாரிக்கப்பட வேண்டும். சென்னை நகராட்சி மன்றச் சட்டத்திற்கு விரிவான திருத்த மசோதா தயாரிக்க நாளாகும் என்பதால் இந்த மசோதாவில் அதை இந்த அளவிற்குத் திருத்தியிருக்கிறோம். (குறுக்கிடு) ஸ்தல ஸ்தாபனத் தேர்தல்களில், அரசியல் கட்சிச் சின்னங்கள் இல்லாமல் இருப்பது நல்லது. பஞ்சாயத்துத் தேர்தல்கள் விஷயத்தில், அரசாங்கம் இதை வற்புறுத்தியிருக்கிறது. பஞ்சாயத்துத் தேர்தல்களில் அரசியல் கட்சிச் சின்னங்களைப் பயன்படுத்தக் கூடாது, வேண்டுமானால் குதிரையையோ அது போன்றவற்றையோ சின்னமாக வைத்துக்கொள்ளலாம் என்று உத்தரவு போட்டிருக்கிறோம். அதாவது வேறு யாருக்காவது கட்சியை நுழைக்க வேண்டும் என்று இருந்தால் கூட, கூடாது என்று சட்டம் போட்டு விட்டோம். அது நல்ல முறையிலே திருப்திகரமாக நடந்தது. மூன்றே தினங்கள் இருந்தாலும் வாக்காளர்கள் எல்லாம் நினைவிலே வைத்துக்கொண்டு, யாருக்கு ஓட்டுப் போடவேண்டுமோ, அவர்களுக்குப் போட்டார்கள். அங்கங்கே போராட்டம், கொலை எல்லாம் இருக்கலாம். இது எல்லாம் நடந்தது, பெரிதாக நினைக்கக்கூடாது. கட்சி இல்லாத வகையிலேதான் நடந்தது. ஆனால் கட்சியை விட்டுவிட முடியாது. கட்சி அவர்களுக்குள்ளேயே இருக்கிறது. அரசியல் ஞானம் இல்லாதவர்கள் என்றால், அவர்களை தங்களுடைய உரிமைப் பொறுப்பை உணர்ந்த பிரஜைகள் என்றுகூட பாராட்ட முடியாது. ஆனால் நமக்கு எது எது எந்த எந்த இடம் என்று தெரிய வேண்டும். இந்தக் காலத்திலே எல்லோருமே பாதரட்சை போட்டுக்கொண்டு போகிறோம். கோவிலுக்கு போகும்போது ' என்னுடைய உரிமை என்று' பாதரட்சையோடா போகிறோம். வெளியிலே கழற்றி வைத்துவிட்டு கோவிலுக்குப் போய் சாமியைக் கும்பிடுகிறோம். திரும்பிவந்து போட்டுக்கொள்கிறோம்? அதேமாதிரி நகர மன்றங்களுக்கு கட்சி இல்லாமல் நடப்பது நல்லதுதான். அது தான் கனம் ஸ்ரீ பாலசுப்பிரமணிய ஐயர் அவர்கள் தெரிவித்த கருத்து. அது எப்படி நடக்கும்? ஒருத்தர்விட்டால் இன்னொருத்தர் பிடித்துக்கொள்கிறார்கள். மேல் நாடுகளிலேகூட அப்படி இருக்கிறது. இங்கிலாந்திலே நகரமன்றங்கள் எல்லாம் இருக்கின்றன. அங்கே மாத்திரம் கட்சி இல்லையா? லேபர், கன்சர்வேடிவ் பார்டி, எல்லாம் அதிலே நுழைந்து விடுகிறது. நகரமன்ற தேர்தல்களிலே அதையெல்லாம் அப்புறப்படுத்திவிட்டு நடத்த முடியவில்லை. கனம் ஸ்ரீ பாலசுப்ரமணிய ஐயர் சொன்னது நல்ல இலட்சியம். எல்லோரும் சேர்ந்து ஏற்றுக்கொண்டால் நல்லது தான். ஆனால் இன்றைக்கு இருக்கிறது கட்சி. எந்தக் கட்சியானாலும்; கட்சி மனப்பான்மையை புகுத்தாமல் இருக்க வேண்டும். இந்த அரசாங்கத்தைப் பொருத்த மட்டில், இந்த

4-20 p.m.

[திரு. எம். பக்தவத்சலம்] [11th August 1965

ஸ்தல ஸ்தாபன நிர்வாகத்தின் மேற்பார்வை பொறுப்பை அது ஏற்றுக்கொண்டிருக்கிறது. அரசாங்கம் கட்சி வகையிலே எந்த நடவடிக்கைகளையும் எடுத்துக்கொள்ளாது; மற்ற நடவடிக்கை எடுத்துக்கொள்ளவும் தயங்காது, என்று கூறி என்னுடைய வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

MR. CHAIRMAN : The question is—

'That the Madras City Municipal Corporation (Amendment) Bill, 1965 (L.A. Bill No. 16 of 1965), as passed by the Assembly, be passed.'

The Motion was put and carried and the Bill was passed.

(2) THE MADRAS APPROPRIATION (No. 4) BILL, 1965 (L.A. BILL No. 21 OF 1965).

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move—

'That the Madras Appropriation (No. 4) Bill, [a] 1965 (L.A. Bill No. 21 of 1965), as passed by the Assembly, be taken into consideration.'

SRI G. KRISHNAMOORTHY : Mr. Chairman, Sir, I wish to . . .

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, the convention in this House is that no speeches are made on the Appropriaton Bill.

SRI G. KRISHNAMOORTHY : Last year we were allowed to speak. There was a convention two years before. What I wish to submit to the House is . . .

MR. CHAIRMAN : Five minutes' speaking will perhaps solve the problem.

SRI G. KRISHNAMOORTHY : Now, the Appropriation Bill is providing for amounts . . .

SRI K. BALASUBRAMANYA AYYAR : Sir, it is better to follow the convention of not speaking on the Appropriation Bill.

MR. CHAIRMAN : The hon. Member will kindly advise his friend.

SRI K. BALASUBRAMANYA AYYAR : I am bound to tell the Chairman the convention.

MR. CHAIRMAN : The hon. Member Sri G. Krishnamoorthy is amenable too.

SRI G. KRISHNAMOORTHY : I wish to submit that this House does not have an opportunity to just discuss the various Demands in respect of Education and others. We have got a lot to say . . .

---

[a] Printed as Appendix II on pages 45–47.